துரிதங்களுக்கேயிருப்பிடமாய்ச்சுகமீதகாமுதலுடைத்தாய்ப்
பரிபக்குவமற்றில்லாதபஞ்சவிடயங்கெடுதியதே
யரியபிரத்தியுபகாரமதற்றுச்சமானமில்லைமாதர்
பிரியமலதுபின்னைமற்றைப்பிரியமபிரவஞ்சத்திலேயே. (யரு)

கண்ணிதமாங்காரியாகாரியத்தைத்தேறறிஞர்
கண்ணிதமுங்கங்கைக்கரைசூழிமயவரைக்
கண்ணிதம்பஞ்சேவித்தல்காரியமதன்றிமின்னார்
கண்ணிதம்பஞ்சேவித்தல்காரியமென்றேதுவரே. (யசு)

மண்டலத்திற்பொய்யாமில்வாழ்க்கையையோசித்திடுங்கால்
கண்டபிரமாணுபவக்காட்சியினையநுபவமாய்க்
கொண்டிருத்தலல்லதுபெண்கூறினிற்கைவைத்திருத்தல்
பண்டிதரிவ்வழியிலொன்றைப்பகுத்தறிந்துகொள்ளுநெறியே. (யஎ)

பங்கப்படுத்தும்பவக்கடல்விட்டேற்றுசுத்த
கங்கைக்கரையினல்லாற்காமுகரைக்கேளியினுற்
றங்கைப்படுத்துஞ்சமத்துடையமங்கையர்கள்
கொங்கைக்குவட்டிற்குடியிருக்கைகன்றரோ. (யஅ)

வித்தாரமானவிருதாவழிப்போக்சே
ணித்தாரணியவிரண்டுநுகர்ந்திடும்பொருள்கண்
முத்தாரக்குத்துமுலையாரைமேவுசிர
மத்தாற்பெறுமெவ்வனமும்வனமுந்தானே. (யகூ)

வட்டமுலைமாதரைப்போன்மனோகரமாம்பொருள்கிடையா
திட்டம்விசுவாசமுநலிலவாழ்க்கைக்கேதுமவர்
கட்டகட்டங்களுக்கெல்லாங்காரணமுமவாசுனை
யட்டதிக்கெங்குநும்வெளியாயறியாதபேரிலையே. (உ0)

சம்போகவருணைமுற்றிற்று.



# காமினிகர்கணம்.

சுத்தவாபாசமாங்தோற்றருத்தியாம்பெண்ணையானை
மத்தகங்கொங்கைநிலைமைக்கவிற்புருவமென்னப்
பித்தர்போற்புகழ்ந்துபேசிப்பிரியமோடணைந்துமேவும்
வித்துவான்கண்மாமோகவிகாரமாச்சரியந்தானே. (க)

எண்ணிடில்வெந்தாபமெதிர்நோக்கிற்கண்மயக்கம்
வண்ணமுலைதீண்டின்மதிமயக்கமுண்டாக்கும்
பெண்ணணங்கை[illegible]
கண்ணிலாமாந்தர்கள்நிந்துரைத்தல்பொருந்தாதே. (உ)

செனிப்பெனும்வாரியிற்பெண்ணெனுந் தூண்டிலைச்சேர்த்தெறிந்து
கனித்தவர்வாயிதழாகியமாமிசகண்டந்தின்னு
மனித்தரெனுங்கெண்டைமீன்களைக்காமவலையன்பற்றி
யினித்திடுயோகக்கனன்மூட்டியேசமைத்திட்டுண்பனே. (௰௨)

மனமாந்தனிவழிச்செல்பவனேதனமால்வரையாற்
றினமாருஞ்சோரத்தடையாகுமவ்வஞ்சியர்புரமாம்
புனமூடுபோகிலைபோனாலவிடத்தெப்போதும்பலவிக்
கினமேசெய்மன்மதனுஞ்சோரனங்கிருக்கின்றனனே. (௰௩)

பெருகமுதக்கொடியாவர்பிரியமுண்டேல்விடக்கொடியாம்பிரியமின்றேன்
மருவியவல்விடந்தீண்டின்மாற்றுதற்குப்பலவிதமாமாக்கமுண்டு
ஒருமையும்வக்கிரமுமுடைககாரிகையார்பார்வைபட்டாற்காதன்மீறும்
புருடருக்குமருந்துமாந்திரிகனுந்தேடிற்கிடையாபுவியிற்றானே. (௰௪)

நடனக்காரனந்தனமர்த்தனுதியமூதாரசங்கந்த
மடவாரிடத்திலுண்டென்றுவஞ்சித்திரசத்துருவாக
வடடாவெகுகாரியக்கெடுதியாகும்படிக்குவிடமனைய
விடயமனைத்துமெனைமயக்கிவீணைமோசஞ்செயதனவே. (௰௫)

முன்னைமணிமந்த்ராவுடதத்தாலுநிவிர்த்திசெய்யமுடியாமற்றை
யென்னவிதமாயனந்தஞ்சாந்திசெய்தபோதினும்போக்கெய்தாமோக
சன்னதத்தாலகமதில்விசாரமுண்டுபண்ணுவிததுத்தரியாவண்ண
மன்மதனும்பசாசமெனைச்சக்கரம்போற்கணசுழலமயக்குந்தானே. (௰௬)

அந்தகன்விருத்தன்மூடனழிகுலன்குட்டரோகி
தந்திடுமொருகாசுக்காய்த்தனம்பிறர்க்காடுத்துப்போதப்
பைந்தருமேலேசூழ்கற்பகமதிக்கொடியுங்கொய்யு
நிந்தைசேர்பொருட்பெண்டீர்மேனினைவினையெவன்வைப்பானே. (௰௭)

ஆசைகூரழகாஞ்சமித்தால்வளர்
வேசையாமவிராகாக்கினிமேன்மதன்
பூசைசெய்பவர்பொற்றனமெவ்வன
மோசையாலளித்தோமஞ்செய்வார்களே. (௰௮)

சாரர்படர்நடர்கீழ்சாதியினர்தூதரொடு
சோரர்பிறர்கூடியுண்ணுந்துச்சவெச்சிலோடான
வாரார்குவிமுலையார்வாயதரபானமதை
யோராமற்சேர்ந்துபுருடோத்தமர்களுண்ணாரே. (௰௯)

வாக்கினிலேசெந்தேனுமடவியர்தம்மிருதயத்திற்
றீக்கடுவுமெப்போதுஞ்சேர்ந்திருத்தலாலவரோ
டாக்குமிதழ்ச்செந்தேனையருந்திமனமகிழ்ந்துபின்னே
தாக்கியேமார்பினின்மர்த்தனஞ்செய்வாராடவரே. (௨௰)

காமினிகர்கண முற்றிற்று.

---

# சுவிரத்ததுர்விரத்தபத்ததி.

கருக்குந்திருக்குவளைக்காடயிடையிற்கவிஞர்மடிப்புமெய்வனத்தின்
செருககுமருட்கொள்யாலிபர்கள்சித்தமுருக்கும்படிநெருக்கும்
பெருக்குந்தனமுமுடைமடவார்பேரில்விகாரமன்னியிலே
யிருக்கும்புருடனெவனவனேயெவர்க்கும்புருடோத்தமனுமே. (க)

மந்தமாக்திருட்டியினுன்மருட்டுருட்டுசிமிட்டுவிடு
பந்தமாமஞ்ஞானம்பாழானதெய்வனமும்
விந்தையாயொழிந்துமனோவிர்த்தியுங்காடுறைந்ததினி
யிந்தவுலகந்திரணமெனநினைப்போமேந்திழையே. (உ)

என்னுடையமோகவிகாரங்களெல்லாமொழிந்ததுபின்னிதயம்வாட்டு
மன்மதனும்வேடன்விடுமக்கினிபாணங்குளிர்ந்துமனோராச்சு
மின்னிடையேயின்னுமமென்மேற்சருக்கணீலமலர்விரும்பிச்சாத்தும்
தன்னுடையதன்மைவிடாளென்னுயிரைவிழுங்கவந்ததலைவிதானே. (௩)

பூங்கணையைப்போடாதேபோடாசும்மாமதனு
மாங்குயில்காளேனீயகள்வாய்சடைக்கக்கத்துறீர்
வீங்குமுலைமாதேயுன்வீண்பார்வைபோதுமுள்ளம்
பாங்குடனேயெம்மான்பதமலரேவேண்டிடுமே. (௪)

கவனமிகுமநுராகிகட்குவிரகத்தினிலு
மவரிலொருவர்க்கொருவரனுபவச்சேர்க்கைகள்விளங்கு
மெவர்மனமொன்றாகவில்லையோவவர்க்குச்சேர்க்கையினுந்
தவனமிகும்விரகமதைத்தானேயுண்டாக்கிடுமே. (௫)

மாவடுவைவகிர்ந்தன்னவரிவிழியாடன்மனையிற்
சிவனுடனிருந்தாலுஞ்சிவனில்லாதிருந்தாலு
மாவறருங்கார்காலத்தடுக்குமொருவழிப்போக்கன்
போவதினியொழிவனெனப்போகானவ்விடத்தினுக்கே. (௬)

கனங்குழலார்தருஞ்சுகமோர்காலமுஞ்சாசுவதமல்லக்கவிகாணன்னோர்
தனங்கணிதம்பங்களரகெய்தாமற்றடைசெயுமாதலினுந்தன்னு
மனங்களிகூர்ந்திடக்கருணைமயித்திரியைச்சேரறியாமயிலன்னுளைத்
தினந்தினமும்பிரியாமலுடன்கலந்துசகவாசஞ்செய்குவீரே. (௭)

யோகமார்க்கத்திலாசையுலகிலியாருடையவுள்ளத்
தேகமாய்விளங்குமன்னோர்க்கிலங்கிழைமடவார்தங்கள்

பாகனமொழியுங்கூடிப்பருகிதழ்ச்சாறுஞ்செந்தேனுந்
தாகமோடணைத்துக்கட்டித்தழுவிச்சேர்தலும்வேண்டாவே. (௮)

மன்மதனெனுமந்தஞானவல்லிருடன்றலெல்லா
மன்னமென்னடையாராய்ப்பார்த்ததுவிப்போதறிவாமைபா
லென்றுடைப்பார்வையானதெய்வுலகத்தியாவ
தன்றுளேபிரமமாகச்சந்ததம்பார்க்குந்தானே. (௯)

மின்னேர்நுண்ணிடையார்வெய்விடமார்சஞ்சலப்பார்வை
யெந்நேரவரைபார்வைக்கெதிர்ப்படாதிருந்திடுமோ
வந்நேரவரையிலும்புண்ணியவான்கட்கசையிலாத்
தன்னேரில்லாதபகுத்தறிவொளிமேற்றயங்கிடுமே. (௰)

எல்லாநூலுங்கற்றவர்மானினியார்சேர்க்கைகெட்டதெனச்
சொல்வார்சமத்தாயடிக்கடிவாய்ச்சொலலாற்பினைப்பயனென்னே
வல்லார்முலையார்மணிக்காஞ்சிவடமார்பருத்தசகனமதிற்
செல்லாதவராசையைநிவிர்த்திசெய்யுஞ்சமர்த்தனெவனானே. (௰௧)

இந்திரலோகந்தவசுக்கேற்றபலந்தந்தருள்வ
தந்தவுலகத்துமரம்பையரேசொந்தமின்னார்
வந்தெதிரிடுங்குடிலவாதிபரவஞ்சர்களோ
நிந்தைசெய்வார்மாதர்களைநிந்தைசெய்யார் [illegible] வைவர. (௰௨)

துங்கமதயானைமண்டைதுளைபடுத்துஞ்சேவகருஞ்
சிங்கமேற்பாய்ந்துகொல்லுந்தீரர்களுமெங்குமுண்டு
அங்கசவேள்செருக்கினையடக்கவல்லாரெங்குமில்லை
யெங்குமில்லையெனாநீசவையெங்குஞ்சாட்டுவையே. (௰௩)

காதளவோடிப்புருவவில்லினின்றுங்கடைபிறழுங்கடைக்கணோவான்
மாதரொதுவரைமனதையிருபிளவாக்கிலையோவமமட்டு நல்ல
நீதமுடனிந்திரியநிக்கிரகநல்லொழுக்கமெடுத்தாளாண்மை
போதமிகுசாந்தமுதலெக்குணமுமடவர்க்குப்பொருந்துந்தானே. (௰௪)

பேராசைப்பற்றுடையபெண்டிர்செயுஞ்செயலை
நேராய்த்திருப்பவானீண்முடியைத்தேடியபோற்
பாராதியைம்பூதம்பல்லுருவாய்ச்சிட்டிசெய்வோ
னாராய்ந்துபார்க்கிலவனாலுமாகாதே. (௰௫)

அன்னநடைமின்னார்மேலாசைகொண்டவாடவருக்
கென்னவிவேககுணமெல்லாமிருந்தாலு
மன்மதவிடாக்கினிசர்வாங்கமெங்குமேலெழுந்து
தின்னுமட்டுநிற்குமல்லாற்சொன்னவைமேனில்லாவே. (௰௬)

வஞ்சியர்விற்புருவமெமபுரவாசற்கதவுகளின்
குஞ்சிகைபோல்விளங்குவதாற்குடும்பசாகரத்துழல்வோன்
விஞ்சுசாத்திரநீதிவிவேகமறிந்தோனெனினுந்
தஞ்சமெனநற்கதிகள்சார்ந்திடுதலருமையே. (௰௭)

காண்மூடமொருகண்வாலிலாதினைத்தங்கம்மெலாம்புழுநெளிவிரணத்
துன்வழிந்தொழுகமுகப்பணியாகவொழிந்துணைவெறுத்துடைசோற்றுப்
பானையோடேலயவோடுநாய்காமப்பசிக்கெதிர்கண்டபெண்ணுறையைத்
தானேயோமேவுமென்றோடர்த்தோடத்தக்கதாய்க்காமன்வாட்டுவனே. (௰௮)

சகந்தனைச்செயக்குஞ்சக்தியைச்சித்தசற்குதவிடுஞ்சமத்திகளைப்
புகழ்ந்துகொண்டாடாதகந்தைபோடிகழ்ந்தபுருடாமதர்யிகள்சிலபேர்
திகம்பரர்பிரமசாரிகாபாலிகெண்டிகளாய்த்திரிவார்கள்
சுகந்தருபோகங்கிடைக்குமோகிடையாசுகமதனுலோமீறினர்க்கே. (௰௯)

சருகுசலங்காற்றாலும்பராசரர்கோசிகர்முதன்மாதவர்பெண்ணுருசைக்
குருகுசித்தமுடையவராய்த்திரிவாரேலுருச்சியொடுமுருக்கியார்க்கும்
திருதகுள்பாயசபோசனப்பிரியர்க்கிந்திய நிக்கிரகஞ்செய்ய
வருமாவப்படிவருமேல்விந்தமலையென்மிதந்துவருமென்பாரே.

## சுவிரத்துர்விரத்தபத்ததிமுற்றிற்று.



ருதுவருணனை.

## வசந்தருதுவாகிய விளவேனிற்காலம்.



மந்தமாருதஞ்சுகந்தமருவமாங்குயிற்கூவப்
பைந்தருக்கடளிர்ப்பனித்துளிபோன்மடவியர்தஞ்
சந்திரமாமுகம்வெயர்வைதரவரும்வசந்தருது
வெந்தவஸ்துகளுக்குத்தானெய்துவியாகுமோதயமே. (௧)

கொத்தவிழ்சந்தனச்சாரற்குளிர்வாடைகுயிலோசை
மெத்தெனவேவசந்தருதுவினில்விரகிகளைவருத்த
வெத்தனஞ்செய்தனவலிவியாவருக்குமிடருறங்காற்
புத்தமுதுந்திவிடமாய்ப்போய்விடுதலியற்கையே. (௨)

அரும்பலர்கொடிப்பூம்புதைகளுங்கிலிகிஞ்சிதத்ததாமணியிழையாருங்
கருங்குயிற்றொனியுங்கலீசுரர்பிரசங்கமுநிலாவாடையும்வாசம்
பொருந்துபூந்தடமும்புட்பமாலிகையும்புண்ணியசாலிகட்கவர்செய்
பெருந்தவப்பயனால்வசந்தகாலத்திற்பெரியதோர்சுகம்பெறச்செயுமே. (௩)

---

குஞ்சிகை—தாழ்க்கோல்.

கிலிகிஞ்சிதம்-சிங்காரரசத்துக்கிருப்பிடம்.

விரகமடவார்விரகவெந்தழற்காகுதியாமா
மரமலர்க்கொத்தினைநோகஞ்மதித்தனமாங்குயில்களங்கண்
சுரதசிரமந்தணிக்கச்சூழ்ந்திடும்பாதிரிமணத்தைப்
பரவுமலையாநிலமேற்பரப்பிவருமெங்கணுமே. (௪)

புதுநிலாநிழற்றனங்கன்பூந்தேர்போலசைந்துவரு
மதுமலர்ச்சந்தனச்சோலைமணங்கமழுமிளந்தென்ற
லெதுவரையுங்குளிர்வீசாதிருக்குமோவதுவரையுஞ்
ச...நடைமங்கையர்க்குமனஸதாபமுண்டப்புறமிலையே. (௫)

நீர்த்தடம்பூங்கொத்துகளிற்செந்தேனுடனேசெறிவாச
மோந்துவரிவண்டுகண்மயலின்மூழ்குமவசந்தகாலமதிற்
சார்ந்தமுலையார்தமைக்காணிற்சகத்தில்விடயசுகம்பொருந்,
மாந்தர்தமக்குளியாருடையமனந்தானவர்பாற்செல்லாதே. (௬)

## கிரீஷ்மருதுவாகிய முதுவேனிற்காலம்.

சந்தனக்குளம்பால்விளங்குகாமிகண்மந்தாநிலநிலாமணிமேடை
கொந்தலர்வாசமல்லிகைப்புட்பக்குலவியவெந்திரகிரக
மிந்தவிந்திரவைபவத்துடனுலகத்தெவருநல்லின்பமெய்திடவே
வந்திடுகிரீஷ்மருதுவின்மன்மதனைமதத்தொடுவளர்ந்திடச்செயுமே. (௭)

வத்திரங்களபசந்தனம்புட்பம்வளர்நிலாவுபரிகை தூளி
மெத்தைமேல்விசிறிவெறிமதுவுண்ணன்மிருத்ததாமரைமலர்வாவி
முத்தணிமுலையார்முதலியபோகமுதிர்ந்திடுகோடைகாலத்தி
லுத்தமபுருடர்க்கல்லதுபின்னையொருவர்க்குங்கிட்டிடாதவையே. (௮)

தண்ணிலாமலர்மாலைசந்தனங்கேளிக்கிசைந்த
வண்ணமணிமேடைபெண்கள்வதனமுதிர்வேனலிலே
யெண்ணமுறுங்காமிகளுக்கெப்போதும்விகாரமுண்டு
பண்ணுமிட்காமிகட்கதைச்சொற்பனத்துமுண்டுபண்ணுவே. (௯)

## வருடருதுவாகியகார்காலம்.

போராசைவெளிகாட்டப்பெருத்தபயோதரம்விளங்கத்
தாராரும்புதியநறுஞ்சாதிமலர்மணம்பொருந்தக்
கார்காலமாகியபெண்காசினியிற்களிப்புடனெல்
லோர்களுக்குஞ்சந்தோடமுண்டுபண்ணுவித்திடுமே. (௰)

மேகவான்கான்முளைவிளங்குநன்னிலந்
தோகையார்வனம்பலசுகந்தவாடைக
ளேகமாய்க்கூடியேயெவர்க்குங்கார்தனிற்
போகமார்தருசுகம்பொருந்தச்செய்யுமே, (௰௧)

கருமுகில்சோலைபலையக்காட்டக்கார்ப்பருவந்தனிர்காட்டப்
பருபதமேற்சிறைவிரித்துப்பசுந்தோகைநடங்காட்ட
வுருவிலிமோகாவேசமுடையோரெவ்விடத்தினிற்றான்
மருவியதம்பார்வையிணைமலர்ந்தருளச்செய்வாரே. (௰௨)

மின்னற்கொடியின்பிரகாசமவிரிந்ததாழைமடல்வாசம்
வன்னப்புயலின்பெருமுழக்கமயிலின்றொனிகளிவையுமதன்மேற்
சொன்னமனோரம்மியமபொருந்தும்சுதினமதுமன்மதபீடை
தன்னையடைந்துபிரிவடைந்தோர்தமக்கெவ்வாறுகழிந்திடுமே. (௰௩)

கன்னங்கரியவிருள்கார்த்தொனிவிடாமாரி
சொன்னக்கொடிபோலச்சோதியெங்கும்வீசுமின்னை
லன்னியர்தஞ்சேர்க்கையவாவித்துணிவழிச்செல்
பொன்னனையார்க்கின்பதுன்பம்போம்வழியிற்றந்திடுமே. (௰௪)

இரவுபகலடைமழையாலெழுநிலைமாடத்திருப்பாச்சிலைவிடாத
விரகசன்னதத்தாலிங்கனங்கிடைத்ததசைந்துகுளிர்வீசுங்காற்றாற்
சுரதசிரமந்தணிந்ததாதலிறுறறாரத்தினமுஞ்சுதினமாச்சு
தாயசல்குலினல்லார்கலவியினைவிருமபியவாடவர்க்குத்தானே. (௰௫)

## சரருதுவாகியகுளிர்காலம்.

அத்தராத்திரிமட்டுடன்கலந்துவகையாயனுபவித்திடுசிரம
மத்தியபானமதமடியுடன்சோமடவியர்தளர்நடையினராய்
மெத்தைமேலிருந்துமதியொளிவிரிந்தவெள்ளரிப்பழமெனத்தெளிநீர்
கைத்தலத்தேந்தப்புண்ணியவான்கள்களிப்புடனருந்திடுவாரே. (௰௬)

## ஹேமந்தருதுவாகியமுன்பனிக்காலம்,

பத்த முதனையவறுசுவையுடன்சேர்போசனமருந்திமேற்சிவந்த
யதிராஜிகள்மேலலங்கரித்தைந்துவாசமார்பாகிலைச்சுருள்கன்
னதனனிலொருக்கிகுவிமுலையணங்கனருடன்குளிர்பனிக்காலத்
துத்தமரூர்ந்தமேடைமேற்கூடியுவகையங்கடலுண்மூழ்குவரே. (௰௭)

குங்குமமர்தாரமலர்க்கொம்பரிடைப்படர்ந்தமௌவற்கொடிகண்மீது
தங்குசிறைவண்டிசைகுஞ்சதாசுதிசேர்பனிக்காலந்தன்னிற்சேரு
மங்கையராடவர்பிரிவாற்றாமையிலுண்டாங்காமவருத்தத்தாலே
கங்குலானதுவிடியாதெமலோகம்போற்போகக்கழிப்பர்தாமே. (௰௮)

## சசருதுவாகியபின்பனிக்காலம்.

ஒருகனத்தோடிருகனத்தைமுத்திமுகத்தினிலேநெட்டுயிர்ப்புவீங்க
விருதனத்தைவலிதினிற்றெட்டேதிதுகாண்பெரியவம்பதெனப்பிற்றட்டிற்
சொருகியமுன்றானைதனைப்பிடித்திழுத்துமிக்கச்சருவிச்சோராமாத
ருகினில்வந்தனுதினமுமருவியகாமுகரென்கோற்றடிக்குந்தானே. (௰௯)

முன்னதாராமுதம்பருகிமுகத்தினிடைச்சீத்காரமுழங்கச்செய்து
வன்னமுலைக்கலையிழுத்துமலர்ந்தவிழிதனைமறைத்துமணமேலெய்தப்
பின்னலணிகுழற்றெரியற்பின்னலவிழ்த்துடற்புளகமெபரிதுண்டாக
வன்னியமாதரைச்சேருமாசையகலெனக்காற்றடிக்குந்தானே. (௱)

ருதுவருணனைமுற்றிற்று.

சிருங்காரசதகமுற்றிற்று.



# வைராக்கியசதகம்

திருஷ்ணாதூடணம்.



மங்களாந்தத்துமுளத்தினூய்விளங்கிமதனனும்விட்டிலைத்தீத்து
வெங்களுங்கரையற்றிலங்கிமாமோகவிருளினைப்போக்கிவேணியினிற்
றிங்களங்கண்ணியிலைச்சிமெய்ஞ்ஞானதீபமாயோகர்தம்மிதயந்
தங்கியசச்சிதானந்தபிரமசன்னிதிதன்னையுண்ணினைவாம். (௧)

செல்லாததேசமெங்குஞ்சென்றேனற்பரைச்சேவைசெய்தேன்மான
மில்லாதிற்றொருமிடிமைபிச்சையைப்புறம்பார்த்துக்காகமெனத்தின்றேனீ
தல்லான்மற்றொருபலனுமெனதிச்சாயத்தினதாலடையேனின்னம்
பொல்லாவீணாசையேயென்றிருத்தியடையாமறபோகின்றாயே. (௨)

தரைமுழுதுங்கனப்புதையலுண்டெனமண்கல்லியதிற்சங்கைதீர்ந்து
திரைகடற்றாண்டியுமலையிற்றுதகலுங்கியுமிராசசேவைசெய்து
மரையிரவிற்சுடுதலஞ்சென்றமேனமந்திரங்கள்செபித்தலைந்துமிக்காள்
வரையொருசோகியுங்காணேன்வாஞ்சையேயின்னமுநீமகிழ்ந்திடாயே. (௩)

துட்டருரைக்கின்றகொடுஞ்சொல்லையுங்கேட்டுச்சகித்தே
னுட்டிணமுங்கண்ணீருமுள்ளடக்கியேசிரித்தேன்
கெட்டமதியோரையும்போய்க்கீழ்ப்பணிந்தேனின்னமுமுன்
னிட்டமொழியாயாசையேயெனைக்கூத்தாட்டுதியே. (௪)

தாமரையிலைத்தண்ணீரெனப்பிராணனாசஞ்சலமாயாமதற்காய்த்
தீமதியொடுசெய்யாதவைசெய்துஞானஞ்செல்வச்செருக்குடையலோரப்
பாமரர்சபையுக்கொப்பிலாச்சகலபண்டிதரியாமெனப்புகழ்ந்து
நாமதிபாவம்விளைத்தனமதருமமக்கொருபயனுமிலையே (௫)

அவமானம்பொறுமையன்றிப்பொறுத்தோமில்லறத்துறுபோகமகிழ்ச்சியன்றி
யனுபோகிக்கவில்லை, வெயிலோடுபனியிற்றவியானெந்துசெய்தோஞ்சீதோட்டி
ணஞ்சகித்தோம் [illegible] மனமொன்றிப்பரமன்மேன்மைதன்ற
வோர்செய்யுகன் [illegible] யஞ்தாஞ்செய்தும், தவமதனு
லடைக்கபலத்தைமட்டுஞ்சற்றேனுமியாங்களின்னமடைந்திலோமே. (௬)

---

திருஷ்ணாதூடணம்-ஆசையைத்தூடணித்தல்.

மோகவலையிடைப்படுத்துமொய்குழலார்முதலியவெண்
போகமனுபவிக்கவில்லைப்போகவில்லை முக்காலங்
தாகமுறுதவசால்வெந்தாபமடைகிலையாசை
யேகவிலைநம்வயதேயிவ்விதங்களானதுவே. (எ)

காசையேவிரும்பிமற்றைக்காமுகரைவிரும்பாத
வேசையுறவெனயாக்கைவிட்டதுடலெங்குநல்ல
தேசைவிளக்கிடுமுகமேற்றிரைசிரமேல்வெண்ணரையாச்
சாசைமட்டுமெவ்வனத்தோடழிவிலாதிருந்ததுவே. (அ)

தேகமுப்பாச்சரிந்தாச்சுசிநேகம்போச்சூன்றுதடிநேகமாச்சு
மோகவிச்சைபோகவிச்சைதொலைந்தாச்சுகொண்டாடன்முழுதும்போச்சு
மேகபடலம்மெனக்கண்டமோரோகத்தான்மறைந்துவிட்டதின்ன
மேகபிராணன்போமென்றேக்குறுமென்னேழைமைதானென்னேயென்னே

விருத்தியாம்விதர்க்கபுள்ளொடுதிரமென்னும்வான்றருவினைச்சாய்க்குந்
திருட்டணையலைகண்மோகமாஞ்சுழிசலங்குராமேறாதசலங்கள்
வருத்திடுமிராகவிடங்கள்சூழ்கடங்குமருவியதுராசையதென்னும்
பெருத்தகான்யாற்றைத்தாண்டியோங்கடாம்பேரின்பக்கடலின்மூழ்குவரோ.

திருஷ்ணைதூடண முற்றிற்று.



## விடயபரித்தியாகவிளம்பனம்.

நண்ணியவெம்பவத்தாலாஞ்சற்கிரியைசுகமெனவேநண்ணமாட்டோம்
பண்ணியபுண்ணியபலன்சம்பத்துடனேபயத்தையுண்டுபண்ணும்பூர்வ
புண்ணியத்தாற்பொருந்தியசந்தனமுதலாம்பலபோகம்புவிமேற்போகிக்
கெண்ணியக்காற்றீங்கினையேயெய்துவித்தற்கபிவிருத்தியெய்துந்தானே. (க)

பன்னாளிருந்தும்விடயசுகம்பயனற்றொழியுமொழிவதிலும்
பின்னாசத்தைக்கொடுத்திடுமப்பேர்ப்பட்டதனைவிடயசுகி
தன்னாலொழியான்மற்றதனைத்தானேதெரிந்தங்கொழிப்பானே
லெந்நாட்களிலுமழியாப்பேரின்பசுகத்தையடைவானே. (உ)

தனமுதலானவைபோகந்தனக்கிடமாயிருப்பதென
கனவினிற்கண்கண்டதையுஞானிகள்பொய்யெனத்தீண்டார்
கனவினுமுக்காலத்துங்காணாதுகற்பிதமாய்
மனதினிற்றோன்றிடுதலையாமறந்திருக்கமாட்டோமே. (௩)

சச்சிதானந்தந்தனையுணர்பெரியோர்தங்களானந்தக்கண்ணீரை
கச்சியேபறவைக்கூட்டங்களவர்தடுத்தொடைமேலிருந்தருந்துங்

---

விதர்க்கம்—விடயவிச்சை.

விடயபரித்தியாகவிளம்பனம்-விடயபோகநீக்குதலைக்கூறல்.

கச்சணிமுலையாருடன்மணிமேடைகமலவாவிகள்வனங்களிலே
யிச்சையோடநுபவிப்பவர்க்காயுளேபயனின்றியேகிடுமே. (ச)

உண்பதோர்தடவையதுமுருசியில்லாவூர்ப்பிச்சை
கண்படைமண்டரைமேடுகந்தையடைவத்திரமே
நண்புநிலையற்றவுடனாலுமிவ்வாறிருந்தாலும்
பண்பிலாவிடயவிச்சைப்பற்றெமக்குநீங்காவே. (ரு)

மர்மிசபிண்டமாந்தனஞ்செம்பொன்மணிக்குடமலசலத்தான
மாமிருசகனமியானைமத்தகங்கோழைக்கிருப்பிடமதாம்வதனம்
பூமியிலுதயமாமதியெனவேபூவையரவயவாதிகளைத்
தாமிகக்கவிஞர்வாக்குச்சாதுரியத்தாற்பலவாறுகூறுவரே. (சு)

சிவனேகாமிகட்குளாத்தனாரீசன்மன்மதனைத்திக்கண்ணாற்சுட்
டவனேசிட்காமிகட்குளதிதீரன்மற்றொருவரையுநாங்காணோம்
புவனமெலாஞ்சுடுங்காமவிடாக்கினிமுன்சிறுபூளைபோல்வான்மற்றை
யெவன்மடவாருடன்கூடல்பிரிதல்சமரசமாகவிருப்பான்றானே. (எ)

அக்கினிச்சுவாலையதில்விட்டில்வீழுமரிவிலாமீன்களுண்பொருட்டாற்
சிக்கிடுந்தூண்டிறனிலவைதெரிந்துந்தெரிகிலர்போலவேநாங்க
டுக்கமாதிகளுக்கேதுவாம்பெண்களாசுகத்தினைக்கைவிடமாட்டோ
மிக்குவலயத்தைக்கெடுக்குமாமோகமெப்படிப்பட்டதோர்நதிலமே. (அ)

தாகமுடையோன்குளிர்ந்தசலமருந்தும்பசியுடையோன்
பாகமுடனன்னமுண்பானபற்றுடையோன்மடவாரை
யேகசயனத்தணைவானிப்படிரோகநதீர்ந்து
போகவிடற்கேதுவினைப்போகமெனல்பொருந்தாதே. (கூ)

துலங்குமாடம்பெண்டிர்பிள்ளைதொலையாநிதியெனவனுதிகளிற்
கலங்கியவைசாச்வதமெனவேகல்லாமூடர்சமுசார
விலங்குக்கூடந்தனில்வசிப்பார்விவேகவான்களவையனைத்து
மிலங்குமாயாகாரியமென்றெண்ணிமனத்துநினையாரே. (௰)

விடயபரித்தியாகவிளம்பன முற்றிற்று.



## யாசிஞைதனிய தூடணம்.



அழுதுபசியெழுஞ்சிசுதன்னைத்துணியைப்பற்றியிழுத்தலறக்கண்ணீ
ரொழுகியுடறனர்மனையாள்கவலைகண்டுள்ளுடைந்துமிடறுள்ளேவிங்கும்
வழுவிலதிதீனந்தமனைப்பாசநீங்கிவிரவச்சத்தாற்றன்
புழுகெளிசான்குழிதூர்த்தற்பொருட்டொருவர்பாவிரக்கப்போநிலனே. ( )

---

யாசிஞைதனிய தூடணம்—இரத்தற்றொழிலைத் தூடணித்தல்.

மானமெனுமுடிச்சவிழ்ப்பதாய்த்தீரமுதலாந்தாமரைக்கூட்டங்கட்
காணவிலவாய்ப்பெருநாணெனுங்கொடியையறுக்குமரிவாளாயன்ன
பானமுதலிட்டடைத்தூர் தூராதுட்குழிந்தபெரும்பாண்டம்பொல்லாத்
தீனவிர்த்தியாற்பிறர்பாலேற்றணினுநிரம்பாதுசிறிதுந்தானே. (௨)

பந்துகளைவேண்டியவர்பாலிரந்துவாழ்வதினு
மந்தணர்தம்யாகசாலையிற்புசித்தும்வனங்களிற்போய்க்
கந்தமூலங்கடின்றுகோபாலிநாமெனவே
எந்தமனைதோறுமையமேற்றுமுயிர்வாழ்தனன்றே. (௩)

எத்தனையோபழித்தயலோரிடும்பிச்சையேற்றுழல்வீர்
முத்தனையபனித்திவலைமொய்த்தகங்காதீரமொடு
வித்தியாதரர்வாசமேவுசிலாதலங்களும்வா
னத்தலத்தோங்கிமயவரையதும்போயெங்கொழிந்ததே. (௪)

இலைகனிசாய்கிழங்குகடீந்திட்டனவோமரவுரிகளெலாம்பாழாச்சோ
மலையருவிசுவறியதோகுறைவாழ்வாலுறுங்கெருவமாந்தீக்காற்று
லலைபுருவச்சிலைதுடிக்குங்கொலைவேந்தர்பக்கலிற்சென்றவரைப்பார்த்துத்
தலைகவிழ்ந்தேஞெதினர்மதிமயங்கிநின்றுபாதவிக்கின்றாரே. (௫)

காயரியகிழங்கருந்துகற்றரையாம்புதிதுபுதி
தாயபாயலிற்படுநாமகலும்வோந்தவனத்திற்
றீயகுணமுடையபணச்செருக்கினரையார்க்குமொன்று
மீயவிலையென்றுபிறரேசுதலைக்கேளாமே. (௬)

எண்ணியகனிகள்வனத்திலுண்டங்கேயினந்தளிர்ப்படுக்கையுமுண்டு
புண்ணியநதிகடொறுந்தண்ணீருண்டெப்பொழுதுமச்சுகமடையாமன்
மண்ணியற்செல்வர்வாயிலிலவரேவாயில்காப்பாளர்போற்காத்துப்
பண்ணியகன்மத்தாலறிவீனர்பற்பகல்கழித்தலைவாரே. (௭)

பொருளுடையோரிடத்தெளிமைபுகன்மூடர்விடயவிச்சைபொருந்துமோக
ரிருவர்களும்வீணாகத்தொலைத்திடுநாண்முழுதுமனத்தெண்ணியெண்ணி
யருள்பெருகுமலைக்குகைக்கற்சேக்கையினிலாண்மதியானத்தினோடு
மருவுபிரமானந்தமாய்த்தனியேயினிதிருந்துமகிழுவேனே. (௮)

பெற்றதிலேமகிழ்ச்சியுறம்பெரியோர்க்கெப்பொழுதுமிச்சைபிறவாவேதன்
பற்றறப்பொற்கிரிதனைச்சம்பத்தினுக்கோரிருப்பிடமாய்ப்படைத்திட்டாலு
மற்றவர்க்குப்பணத்தாசையொருபோதுமனத்தைவிட்டுமாறிடாது
சற்றுமெனக்கிட்டமிலையக்கிரியைப்பேர்த்தவன்றந்தாலுந்தானே. (௯)

ஒருபிராயத்தினுமின்றித்தினமுமெங்குந்தடையறக்கிட்டுவதாய்மானங்
கெருவமாச்சரியமிடர்கெடுவதாய்ச்சிற்சுகமாய்க்கிருபையோடு

திருமலற்கும்பெரியோர்க்குஞ்சம்மதமாயட்சயநன்னிதியமாகி
யருமைபெருமையுளபிச்சாகாரமதையோகிகள்கொண்டாடுவாரே. (௰)

யாசிஞாதைனியதூடண முற்றிற்று.

# போகாதைரியவருணனை.

பெலமியல்போகம்வடிவக்குலந்தனஞ்சரீரம்வித்தைபெருமைக்கோர்மாற்
றலர்கலர்நோய்முதுமைவழுவரசர்நமனெதிரியேழைமையாலச்ச
மூலகமதின்மானிடருக்கெல்லாவற்றினுமச்சமுடையதாகு
நலவைராக்கியமொன்றேயொன்றினுக்குமஞ்சாதெந்நாளுந்தானே. (௧)

பிறப்பிறப்பாற்றவனந்தீவிலங்காலிந்தியசுகங்கள்பெண்போகத்தா
லிறப்புறுமெவ்வனமூப்பான்மகிழ்ச்சிபொருளாசையாலிறைதுட்டாளாற்
சிறப்புடைமைச்சுவரியங்கணிலையில்லாததினாற்சீலமாதி
யறப்பொருமையிரோற்கெடுந்தோடமெதுமடாததுகண்டீரே. (௨)

ஆதிவியாதிகளான்மண்ணவர்பலமெலாங்குறையு
மூதியமாஞ்செல்வமுறினுடனேயாபத்துமுறுந்
தீதின்மிருத்துவுஞ்செனிக்கச்செனிக்கவேசிகைத்திடுவா
னீதியுடனெவையுமயனிருமியானிலைபெறவே. (௩)

போகமலைக்குச்சமானமிமைப்பொழுதுநிலையாநில்லாது
மோகமடவாதருஞ்சுகமோமூடர்விரும்புஞ்சுகமதனை
லேகமயமாயெவையுமனத்தெண்ணிமாபண்டிதர்களதி
வேகமுடனேபரப்பிரமவிசாரஞ்செய்யவேண்டுவரே. (௪)

வஞ்சியர்கள்போகமின்போல்வாழ்நாட்காற்றாலலையுங்
கஞ்சதளத்திடைத்துவலைகழிந்திடுமெவ்வனசுகமோ
சஞ்சலமிக்குடையதெனத்தம்மூளையாராய்ந்து
விஞ்சுமதியீர்பிரமவிசாரணையேசெய்குவீரே. (௫)

அலைபோற்சஞ்சலமாயுள்யௌவனஞ்சின்னாட்குசிதமபாயத்தோடு
நிலையாமையுடையனவேண்மதசேளிசுகங்கண்மின்னனிகர்பல்போகந்
தொலையாதபவக்கடலைக்கடப்பதற்குயுத்தியொடுசுருதிதானு
மலையாநன்மதியுடையீர்பிரமவிசாரணையேமற்றதுசெய்வீரே. (௬)

ஆதிமலமூத்திராதிகர்ப்பவாசத்திலுடலலைந்துழக்க
தீதியுடன்யௌவனத்தின்மாதரொடுகூடியப்பாலீங்கநுக்கம்
வீதியின்மங்கையர்கிழவன்போவதைப்பாரெனச்சிரித்தன்மிகவுந்துக்க
மேதினாற்சுகலேசமெய்திடுமோமானிடரேயியம்புவீரே. (௭)

---

அட்சயம்=குறையாநிதி. போகாதைரியவருணனை=விடயபோகநீக்குநிலை வற்புறுத்திக்கூறல். ஆதி—மனக்கவலை.

கொடியபெரும்புலிபோலேமூதுமைபின்னேபயமுறுத்திக்கொண்டுநிற்
றுடிகொள்பகையாளியெனப்பலரோகங்களுமுடம்பைத்துன்பஞ்செய்யக்கத்
வடியினுடைந்திடும்பாண்டத்தினிரப்புத்தண்ணீர்போலாயுளும்போய்ப்
படியாயுமினமொருவர்க்கிடர்செயற்குமனிதர்சற்றும்பயப்படாரே. (௮)

சஞ்சலமாம்போகத்தாலுண்டானசமுசாரந்தன்னாலேயாயா
துஞ்சலைப்போற்சுழன்றடியோடியலைமாந்தர்களேயொன்றுகேளு
மஞ்சலிர்நீரென்வார்த்தைநம்புநெஞ்சஞ்சமப்ரசன்னமாகியெம்மான்
கஞ்சமலரிணையடியைச்சிந்தியுஞ்சிந்தித்திடினற்கதிசேர்வீரே. (௯)

எந்தவிடத்தரிஞ்சிரிந்திராதிபோகந்துரும்பாயெண்ணுவாரோ
வெந்தருசியாற்பிரபஞ்சத்தைரசவீனமெனவெண்ணுவாரோ
வெந்தவானந்தமழியாததாயுரைகடங்காதிருப்பதோர்
யந்தவானந்தமதைச்சிந்தியற்பபோகமெல்லாமகற்றுவாயே. (௰)

போகாதைரியவருணனைமுற்றிற்று.

# † காலமகிமானுவருணனை.

அந்தநகரேநகர்வேந்தவனேமந்திரவரேயவனாஸ்தானம்
விந்தையதொண்டோடயார்சந்திரமுகிகள்பக்கிருந்தார்மிகவுந்தண்டர்
வந்தியருமவர்வாக்குஞ்சமத்தெனச்சொல்சமஸ்தமும்போமாறுசெய்வ
தெந்தக்காலத்தின்வசத்தந்தக்காலத்தினையாமிறைஞ்சுவோமே. (௧)

பரவுபலர்குடியிருக்குமீட்டொருவன்குடியிருப்பான்பலருங்காண
விரவுபலரொருவனிடஞ்சந்திப்பாரவ்வீடுவெறுவீடாமேமன்
றிரவுபகலெனுமிரண்டுபாசியினைத்தினமுருட்டியியமநாதன்
றரணியெனும்பலகையின்மானிடரெனுஞ்சாரியையுடனவைத்தாடுவானே

சூரியோதயவஸ்தமனமோர்நாளாய்த்தொலைந்திடுமொளிந்திடும்வாழ்நாட்
காரியமனேகத்தாற்செலுங்காலங்கணக்கிலபிறப்பிறப்புடனே
பேரிடர்மூப்புப்பிணிபலவுறதல்பிரசிதமிவையெலாந்தெரிந்தும்
பாரிதுமோகமாகுமத்தியபானத்திறன்மயங்கிடுந்தானே. (௩)

வந்தாரப்பகலேவருவதுங்கழிந்தவைகலேவருவதுமறிந்து
முந்தியேசெய்தமுயற்சியேசெய்துமூடர்கள்சஞ்சலமின்றி
நந்தமக்கெதிராரெனத்திரிந்தலைவார்நாசமாம்பவமுறும்படிசெய்
யந்தவஞ்ஞானத்தவர்சற்றுநாணமத்தமனத்திலுங்குறியாரே. (௪)

சிவபெருமான்றிருவடியைச்சிந்தியேந்திருத்தொண்டர்சேவைசெய்யேன்.
தவமொடுகோபுரவாசற்கதவுமுதலானசிவதருமஞ்செய்யே

---

†காலமகிமானுவருணனை—காலத்தின்மகிமையைக்கூறல்.

மெவனமடவார்சுவர்க்கங்கனவிலுநாங்கண்டறியேமின்னுமின்னு
மவமொடுதாயெய்வனக்காடழிப்பதற்கோர்கோடாலியாகினேமே. (௫)

மீளியோனெனச்சகலவித்தையுங்கற்றெதிரிகளைவென்றேமில்லை
வாளினுலியானைமண்டையிளந்திசைகொண்டேமிலைநீள்வரைமென்றோ
கேளியினைவிரும்பிமதவேளெனச்சேர்ந்தேயனுபோகித்தேமில்லை (ளார்
யாளிலாமாளிகைத்தீபம்மெனயௌவனம்விருதாவாயிற்றம்மா. (௬)

தாகமுடனனேகவித்தையூகமொடுகற்கவிலைதருமநீதி
யாகவிதிதேடவிலையன்னைபிதாப்பணிவிடைசெய்யவுமோவில்லை
மோகமடமாதருடன்கூடியொருசொற்பனத்துமுயங்கவில்லைக்
காகமெனப்பரான்னவுணவாற்காலஞ்சீக்கிரத்திற்கழிவதம்மா. (௭)

மட்டறச்சென்னதிக்கரையில்வளர்மரங்கட்கொப்பாகமாயுமூப்பைக்
கட்டநட்டங்கெட்டபிணிமுதலிடரையுறுமூடர்காணுர்கொல்லோ
விட்டமுடன்றூய்தகப்பனினத்துடன்வாழ்ந்திருப்பவரையிரக்கமின்றிப்
பொட்டெனவேகாலன்வந்துகட்டியுடன்கொடுபோகும்போக்கைத்தானே.

ஆயுணூறண்டதினித்திரைபாதிவாலிபமூப்பதிலோர்பாதி
மாயுநோய்துயர்பிரயாசச்சேவையதனுலேமற்றைப்பாதி
யோயுமறிகடற்றிரைபோலிப்படிவாழ்நாண்முழுதுமொழியுமானுற்
றேயுமிந்தப்பிராணிகளுக்கெப்படியுண்டாகிடுமோசேமந்தானே. (௯)

பாலனுச்சிலகாலம்யௌவனனுச்சிலகாலம்பலவாறன
சாலநிணிதியோனுய்ச்சிலகாலஞ்சிலகாலந்தாழ்ந்தோனுகி
யேலமூப்பாலசியமுடனடன்போனடித்திறுதியினிலேமக்கள்
காலனுலயத்துமுன்னேகட்டுதிரைக்குள்வெகுவேகமாய்ச்செல்வாரே. (௰)

காலபகிமானுவருணனைமுற்றிற்று.

## எதிநிருபதிசம்வாதம்.

நீரரசாட்சியினுங்களுபாசனுகுருவருளாணிபுணராவே
நீர்பொருளானுங்கள்கல்விப்பொருளாற்சற்கீர்த்திநிலைநிறுத்தவல்லே
நீர்நாமென்பதிற்றனஞானந்தாரதம்மியமுண்ணினைவிரேனு
ந்ரெமைப்பாராதவிடத்தெங்களுக்குமவிடத்தினிலேநிராசைதானே. (௧)

பொருளுடையீர்நீர்நாங்கள்வேதாந்தப்பொருளுடையேம்பொருவெம்போ
மருவலரைவெலுஞ்சூரர்நீர்நாங்கள்கவிகள்கெர்வமடக்கவல்லேம் (ரின்
வெருவியுமைப்பொருளுடையோர்வணங்குவர்சீடர்கள்வணங்குமே ார்நா
ணிருபர்நீரெமைவணங்காவிடினுங்களும்மைவிட்டுநீங்குவோமே. (௨) (ங்க

---

¶எதிநிருபதிசம்வாதம்—எதிகளுக்கும்அரசர்களுக்கும்விவாதம்.

எந்தநல்லவுடையுமுமக்கெமக்குமரவுரியெனினு
நந்தமக்குமகிழ்ச்சிசமானம்மதிற்றாழ்வுயர்வில்லை
முந்தவாவுளனெவனோமுடிவிறரித்திரனவனே
சந்தோடமுடையோர்க்குத்தரித்திரஞ்செல்வமுஞ்சமமே. (௩)

அடுத்தபசிக்கருங்கனிகளருந்தாகிப்பெரும்புனல்க
ளுடுத்தநல்லமரவுரிகளுறங்கநெடுந்தரைபோது
நடுத்தவறுந்தனமதுபானக்களிப்பினாலறங்கை
விடுத்தமன்னரபிமானமேலணுவும்வேண்டேமே. (௪)

தங்குமிடமெங்கணும்பிச்சாடனம்வாங்கிப்புசிப்போ
மங்கமதிற்றிகம்பரத்தையழகுபெறமேற்புனைவோம்
பங்கமிலாச்சிங்கமெனப்பாரின்மிசைபள்ளிகொள்வோ
மெங்களுக்குராசரிடத்தென்னவருங்காரியமே. (௫)

நாடகர்களல்லநகைக்கும்விடரல்லவிசைப்
பாடகர்களல்லமகாபண்டிதர்களல்லசெம்பொற்
ரூடகக்கையாரலச்சாதுக்களெங்கட்குங்களிட்
மேடகத்தார்வேந்தர்களேயெவ்வாறுகிட்டுமே. (௬)

சிலவேந்தரெந்நாடுந்தந்நாடாய்வென்றுசம்பாத்தியஞ்செய்வித்தார்
சிலவேந்தரந்நாட்டையொருகுடைக்கீழரசாட்சிசெய்துவந்தார்
சிலவேந்தரந்நாட்டைத்திரணமெனயாவருக்குந்தியாகமிட்டார்
சிலவேந்தராளுகைக்குட்சிலவூராள்பவர்க்கேன்வீண்செருக்குத்தானே. (௭)

அரைநிமிடமொவ்வொருத்தராயனந்தமிராசாக்களரசாளிந்தத்
தரைகிடைத்தபோதிலுமோருயர்விலைப்பூகண்டலேசங்கடன்னிற்
கரையிலாத்துண்டுகளிலொருமூலைக்கெசமானன்களாயுள்ளோர்நாந்
துரையெனவெக்களிப்படைவாரவர்க்குமந்தபுத்திசித்தசுபாவமாமே. (௮)

நண்ணலர்போற்றுணைவரொடுசிறுமண்ணுண்டைக்காப்பொருதுநாடுபாகித்
துண்ணுமந்தக்கெட்டமதியுடையோரொன்றிரப்போருக்குதவுவாரோ
வெண்ணிலவாறிவீனரவர்பாலற்பப்பொருளுக்கிச்சைகூரு
மண்ணவருயவரைப்பார்க்கிலுமறிவீனர்களெனவேமதிக்கலாமே. (௯)

எவனுடையவெண்டலையெம்பெருமான்செஞ்சடைமுடிமேலேறலாச்சோ
வவனுடையசென்மமேநல்லசென்மம்ப்ராணரட்சைக்காகச்சிவச்
சவமெனப்போய்ச்சிலர்வணங்கத்தாதாநாமென்னுமதத்தாலுண்டான
கவசாநீங்காசிலபேர்க்கதிலவருக்கென்னபயனல்குந்தானே. (௰)

இதி நிருபதிசம்வாதமுற்றிற்று.

---

# ‡ மனசம்போதனநியமனம்.

எந்தநாளும்பலவிதத்தன்னியர்கண்மனம்போனடக்கவாற்
றந்தபொருளைப்பெறும்பொருட்டுத்தானேனிந்தப்பிரயாசை
சிந்தைதெளிவுற்றிடிற்றானேசிந்தாமணியின்றிரளொளிபோல்
வந்துபொருந்துமினைத்தெல்லாமனமேமயங்காதிருப்பாயே. (௧)

நெஞ்சேவீணிலலையாதேநித்தம்பிரயத்தினமன்றித்
தஞ்சமெனவேநலந்தீங்குசாரும்பொறுமையுடனிருநீ
மிஞ்சிவிடுங்காரியமுமெண்ணேன்மேமேல்வருங்காரியமுமெண்ணே
னஞ்சேல்விதியாலடைவதெதோவதையேகாணுமனமேவேனே. (௨)

எக்கவலைக்குமிடமாமிந்திரியவனஞ்சென்மார்க்கம்விடு
மிக்கமாயையுடன்கூடிவிளையாடுதலைவிடுசமஸ்த
துக்கநிவிர்த்திசெயுஞானசுகமார்க்கத்திற்சென்மனமே
தக்கசொரூபசமாதியைச்சந்ததமுந்தடையற்றடைவதற்கே. (௩)

முன்னமோகந்தன்னைவிடுமுக்கட்பரனைவிசுவாசி
யன்னம்பயில்கங்கைக்கரைவாசஞ்செயலைநீர்க்குமிழிசெந்தீ
மின்னற்பாம்பினிடத்துமுறவினரோடுழிச்சலவத்திடத்து
மென்னவிசுவாசம்மனமேயிவைநீயாராய்ந்தறியாயே. (௪)

அரசர்புருவச்சாடையாங்குடிசிற்குடியிருந்தியாபாரஞ்செய்யும்
பரபோகஸ்திரியாயுநிலையாமையாயுமுளபலசம்பத்திற்
றிரணமட்டுமாசைவையேல்சிந்தையேகாசிநகர்த்தெருவினூடே
கரமதிலேற்றிடுபிச்சாகாரமதேயபேட்சிக்கக்கடவேனே. (௫)

முன்னிசைப்பாட்டோசையயற்றெக்கணதேசக்கவிகண்முழக்குமோசை
பின்னசைக்குஞ்சாமரக்கைப்பெண்கள்வளையோசைமிகுமபேறுண்டானாற்
பொன்னிசையுஞ்சமுசாரத்திருந்திடில்லாவிடிற்பிறவிப்புணரிநீந்தற்
கென்னசையாமனமேநிர்விகற்பசமாதியிலேயிருந்திடாயே. (௬)

உத்தமமில்சரீரிகட்குச்சரீரமிருந்தாலதனாலுடையதென்னே
சத்துருக்கடலையினெஞ்சேதன்னுடையகழலிணைவைத்ததனாலென்னே
வத்தமுடைத்தாய்ப்பிரியமுடையோரைப்பாதுகாத்ததனாலென்னே
யெத்தனையோவுண்டுபண்ணுஞ்சத்தியிருந்தாலதனாலென்னேயென்னே.

சிவநேயஞ்சாமரணபயம்பந்துசனங்களிடத்தினிராசை
கவனமிகுமன்மதவிகாரமின்மைதுற்சனசங்கமமில்லாத
தவவனத்திற்றனித்திருத்தலிவைமுதலாம்வைராக்யந்தன்னைப்பெற்று
லோகருக்குமுலகுதனிலிதைப்பார்க்கப்பெறும்பேறொன்றில்லைத்தானே.

---

‡ மனசம்போதனநியமனம்—மனத்தைநல்வழியிற்செலுத்தல்.

மேதினியிற்பிறப்பிறப்புவினங்குழூப்பழிவில்லாச்
சோதிசொரூபத்தையெப்போதுந்தியானஞ்செய்நெஞ்சே
பேதியாநிலைமையுறும்பிரமநிட்டனுனக்குமேலா
காதிபத்யம்பிறபதவியற்பமாய்த்தோன்றிடுமே. (௯)

பேதலித்தெண்டிக்கில்வியாபிக்கிறாய்பேய்மனமே
பாதலத்துமீதலத்தும்பட்சிபோற்றாவுகிறாய்
காதலித்துட்சோதியையோர்காலுமெண்ணாயெண்ணிவினையேற்
பூதலத்திற்சிற்சுகமெப்போதுமடைந்திருப்பாயே. (௰)

மனசம்போதனநியமனமுற்றிற்று.



# †நித்தியாநித்தியவஸ்துவிசாரணை.

பேதமறவைக்கியமானபேர்க்குப்பிறவிப்பிணிக்குமருந்
தாதலழிவின்மகாசுகமொன்றதுவேயல்லாதொன்றுமற
வேதமுதலானவையாலுமகிருமபுசுவர்க்காதியின்பலத்தை
யீதலுறுகன்மத்தாலுமேதும்பலன்கிட்டுவதிலையே. (௧)

ஊழிக்கனலால்வடமேருவுங்கேடெய்துஞ்சுவறிவிடு
மாழிப்புனலுமட்டகிரியாறருங்குலகுமழிந்துவிடுஞ்
சூழியானைக்குட்டியின்காதுகளைபோற்சலிக்குமுடற்பொருட்டுப்
பாழினுனென்றபிமானப்படுத்தித்திரிதலியாதினுக்கே. (௨)

உடற்கூறுகிப்பற்போய்க்கண்ணொளிபோய்ச்செவிடாய்ச்சிறந்தமுகத்
திடத்தேசானவாயொழுகியெவர்க்கும்பழிப்புக்கிடமாகி
யடக்கமுறுசெய்பெண்டிர்பகையாகும்விருத்தசரீரிகட்கு
நடக்குங்காலுந்தள்ளாடிநாறுவிதகஷ்டமுமாமே. (௩)

அத்திதோலூறிடுஞ்சண்டாளரிடிணற்றினைக்கல
டுத்தமர்களொதுங்குவபோல்யுவதிகளெல்லாங்கிழவன்
சுத்தநரைத்தலையினைப்பார்த்துத்தூரவொதுங்கிநின்று
மெத்தவருவருத்தவனைவிட்டகன்றுபோவாரே. (௪)

வெந்தெரிமனைக்குக்கூபம்வெட்டயத்தனிப்பாருண்டோ
வந்திடுசரைநோய்மெய்யைவருத்திடுவதற்குமுன்ன
மிந்திரியங்கெட்டாவியேகுமுன்விவேகயான்கட்
கந்தமின்முத்திக்கானவாள்வினைவேண்டுந்தானே. (௫)

மின்னனையபொய்யுடல்வாழ்வினையுடையதுலகதனுள்
மன்னுதவம்புரிவோமாமனைவாழ்வைவிரும்புவமா
பன்னுகல்வித்தெள்ளமுதம்பருகுவமாவுறுதிபெற
வென்னசெய்வோமெனயதார்த்தத்தையோசித்திலமே. (௬)

---

†நித்தியாநித்தியவஸ்துவிசாரணை-நித்தியமிது அநித்தியமிதுவெனவிசாரித்தல்.

குதிரையினசைவுபோலசைமனத்தோர்கொற்றவராதலாலொருவர்க்
கெதிருறாிராசதக்கதையுந்தவிராவிரதங்களுக்குப்பணத்தாசை
யதிகழுப்புடமையைக் கெடுத்திடுமியமநெறியையோம்படிசெய்வான்
விதிவழித்தவஞ்செய்வதிலுமேதினியிலமேலானதுபயிரியமற்றிலையே. (௭)

ஈனமார்பொருண்மானம்முறவினர்களெவ்வனர்தொலைந்துபோம்படிக்கு
மோனமாமொழிகளவாவறமபடிக்குமுத்தியங்களைபுறஞ்சூழும
வானதியலையாற்புனிதமாங்கலலார்களைபபுறப்பூம்புதைவசித்த
ருனனவோருமபுகழ்ந்துகொண்டாடததகுநதவாகவேயதுதகுமே. (௮)

சந்திரிகைபுட்பவனஞ்சாதுக்கள்சகவாச
மெக்தநூல்களுநகேட்ட விலங்கிழைபாருட விழ
ஞெந்தமுகண்ணீர்முகத்தைநோக்கிடலைலவிரமா
னந்தஙிட்டையோாகளுககாநலமனைத தூநதிஙகாமே (௯)

தண்ணிலாமணிமேடைதையலர்களொடுசகவாசஞ்சங்கீத
மெண்ணினிங்காதலிவாபமுகவாதாசுழலுமவிட்டிவிறகின்காற்றின் | கொண்டு
கண்ணனைசயுமவிளக்கொள் போற்சமஸ்தமுஞ்சகசமெனவேகருத்துட்
புண்ணியமாதவமபுரியும்வனங்களுக்குப்பெரியோரெனபோகின்றாரே. (௰)

நித்தியாநித்தியவஸ்துவிசாரணை முற்றிற்று.

## ‡சிவார்ச்சனம்.

அத்தியந்தஞ்சமுசாரசாகரத்திற்கன்மவசத்தாலேயெங்கு
நித்தமுழலுமதுகண்டாதினிறகாணக்கேட்கிலாநித்யனுவோ
னெததனுவாதியவிடயமாம்பெண்யானையினிடததிலிச்சைகூருஞ்
சித்தமெனுமியானையைக்கட்டிடுந்தம்பான்மரமெனவேசெப்பலாமே. (௧)

கண்டபடியேதிரிதன்மனக்கட்டமில்லாமற்கிடைதத
துண்டல்சாதுசங்கமுறலொழிதல்விடயவிச்சைகளுட்
கொண்டதடக்கல்சாத்திரத்தின்குறைவில்கேள்விகொளலனைத்தும்
பண்டுபுரிமாதவமோவப்பலமோவெவையோவறியேனே. (௨)

எண்ணமுட்சிரோணித்ததுயெளவனபருவங்கழித்ததூல்வினியசில
மூண்ணிறைந்தவினையம்விதநைமுதலவெல்லாமொருபலனற்றெழிந்தவந்த
கண்ணிலாக்காலனும்வந்துயிர்கொடுபோகாமலவிட்டோர்காலும்போகா (௩)
னண்ணல்சிவபெருமானடித்துணையேயினித்துணையென்றறிகின்றேனே.

செகதீசனணமகாதேவமகேசானிடத்துஞ்
சகத்தந்தாவன்மாவாஞ்சநார்த்தனன்றனிடத்துமெனக்
ககழிலோர்பேதமில்லையானாலுமெப்பொழுது
மகதேவரிடத்தேயென்வாஞ்சைமிகச்சென்றிடுமே. (௪)

‡சிவார்ச்சனம்—சிவபூசைமகிமை.

ரவமொழுக்கிரவினிலவதிற்கங்காதிரமதி
ரணியஞ்சூழ்புளினமதிலனந்தசெனமமொழித்திடும்யா
ரகரவோஞ்சிவசிவவென்றானந்தபரவசமா
ரசர்மற்றையெவரெமக்கொப்பானவரென்றிருப்போமே. (௫)

பாருண்முழுதுஞ்செலவழித்துப்போகாதியொழிகவென
ருவுமனத்துடனேதெய்வந்தனை முன்வந்தனைசெய்
ருமைமிகும்புண்ணியாரண்ணியத்திலிருந்துசிவன்
ருவடியைச்சாருதுச்சந்திரிகைதனினினைப்போமே. (௬)

ராதிக்கரைநின்றகோவணமதுதரித்துச்
ரசிலஞ்சலியஸ்தனுய்த்திரிபுராந்தகவோ
ரகராரட்சரட்சவென்றனுசந்தானனுமா
ரவுநன்பகல்கணமெனக்கழிப்பதென்றினியே. (௭)

ங்கராவிராசசேவையைவிடுத்துச்சற்குருவாக்கியபரனு
மங்குறேய்நெடியமலைக்குகைதனிலான்மசிலனுமனத்தினையடக்கிக்
ங்கையினைழுழ்கி மஞ்சனமாதிகளாலுனையன்புடன்பூசித்
ரங்குளபலாதிகளைப்புசிதெதன்றோயடியனேன்றனித்திருப்பதுவே. (௮)

றுயாசிவனேயேகாங்கியாகிராசையுடையவனு
மெய்யாய்விருப்புவெறுப்பிலனும்குந்தசாநதம்பொறுமையொடு
கையேபச்சைப்பாத்திரனுக்காதையொழித்துதகம்பரனுப்
பொய்யாங்கன்மதததடிவேரெப்பொழுதுடறுததுப்போக்குவனே. (௯)

எந்தவிடத்தும்வசிப்பதுமாயிருகையிரப்போடுடையதுமாய்
வந்தபுசிப்பினமகிழ்வதுமாய்வையந்துரும்பாய்மதிப்பதுமா
யந்தவகண்டசிற்சுகத்தையடையும்யோகிசிவனருளாற்
பந்தமகன்றுசிவனமுத்திப்பததனைத்தடையற்றடைவானே. (௰)

சிவார்ச்சனமுற்றிற்று.

---

# †அவதூதசரியை.

கந்தையாயிரங்களுடைக்கௌபீனவுடைநடுப்பகலிலேதானே
வந்தபிச்சையூண்காடுசுடுகாட்டுப்படுக்கைகணன்மார்க்கசித்தம்
பந்தமற்றுததிரிதல்சிவயோகநிட்டைபபழக்கவனுபவமுண்டானு
லந்தயோகிக்குமற்றைத்திரிலோகாதிபத்தியமேனதுவேண்டாவே. (௧)

கெண்டைமீனுதியநீர்கிழித்துவிளையாடுதலாற்
றெண்டிரைவாருதிப்புனல்களசிறிதேனுநடுங்காவா
மண்டலமாத்திரமாம்ப்ரமாண்டமாமூலோபமதை
யுண்டுபண்ணமாட்டாவாமொருக்காலுந்தீரருக்கே. (௨)

---

†அவதூதசரியை—முற்றத்துறந்தோர்சரித்திரம்.

பொன்னம்மையுனைப்பணிவேன்மெய்ஞ்ஞானவாழ்வெனக்குப்பொருந்தச்
செய்வா, யின்னமொருவனைச்சேரென்னிச்சைதவிர்போகத்திலிச்சையோ
வுன்னையடுத்திடுவாளுமொருபசியபுரசிலையாமுவந்தபாத்ரந் (வே
தன்னையொருகரத்தேந்திப்பிச்சாவிர்த்திக்கேயத்தினஞ்செய்வேனே. (௩

பூவணைமண்டரைகையேதலையணையாகாயமேபுனைமேற்கட்டி
யேவலுறுந்தென்றலேவிசிறிநிலவேதீபமிவைகளோடு
மாவலொழிந்திடுவிரத்தியாந்தருணமாதுடன்சேர்ந்தனுபோகித்துக்
காவலன்போற்சாந்தம்குஞ்சிவயோகியிராக்கண்ணுறங்கச்செய்வானே. (௪

அடக்கம்பொறையைந்திந்திரியமடக்கறனிமைசுவாதீன
நடக்கைவிரத்திமார்க்கமுடனுற்சந்திகடோறுங்கிழிந்து
கிடக்குந்துணிகிழுடையோனுய்க்கிளைக்கும்பிறவிப்பெருங்கடலைக்
கடக்குமார்க்கங்கண்டுலகின்கண்ணோர்தவசிவிளங்குவனே. (௫

பித்தனோஜாதிப்பிரட்டனோசூத்திரனோ
பத்தனோவேதியனோபற்றொழிந்தமாதவனோ
சித்தனோவென்னச்செகம்பழிக்கக்கோபமற்றுச்
சுத்தமௌனிகளுஞ்சேரக்காய்த்திரிவாரே. (௬)

திரணமனேகம்பசுக்களுக்குந்தென்றல்வியாளங்களுக்குமருள்
பிரமனிவர்க்குமப்படியேபிரயதினமற்றூழ்வசததாற்
றரவுஞ்சமுசாரக்கடலைத்தாண்டுதீர்ககமதையுடைய
நரர்மற்றதைத்தாங்தேயுவரேனசிக்கும்பலநற்குணங்களுமே. (௭)

கங்கைக்கரைசூழிமயவரைக்கல்லிற்பதுமாசனத்திலிருந்
தங்குப்பிரமானந்தழியானுதியோகந்ததிலையிற்
றங்கிவிளங்குமென்னுடம்பிற்றங்கடினவுதீர்ந்திடவே
செங்கட்கிழமானினங்களெலலாந்திரளாய்க்கூடியுரைசிடுமே. (௮)

தன்னதிரப்புப்பாத்திரங்கைதளரபூவமரியட்டதிக்குந்
துன்னுகலையிப்பெருவாழ்வினசுகமேலெவற்குக்கிடைத்திடுமோ
வன்னோனியற்றுஞ்சரித்திரஞ்சுவானுபூதியாமவனே
கன்மவிதைதையச்சுட்டதிமோகபாசங்களைவேரறுப்பானே. (௯)

தந்தைகாற்றனைபூமிசார்ந்தசினேகிதன்றபனன்
பந்துசலஞ்சகோதரனம்பரமாகுமுங்களுக்கு
வந்தனமும்மாலடைந்தமகத்துவமெய்ஞ்ஞானத்தாற்
சிந்தைமயக்கறப்பிரமதியானமதைபடைந்தேனே. (௰)

## வைராக்கியசதகமுற்றிற்று.

ஆண்பால்பெண்பாலவியாயல்லதுமாயுள்ளதுமாய்ப்
பூண்பானும்புசிப்பானும்புணர்வானும்புணர்ப்பானுங்
காண்பானுங்காட்சியுமாய்ச்சர்மகர்ததாவெலலாமாய்
மாண்பாயபரப்பிரமமாநிலத்துவாழியவே.

## பர்த்துருகரி முற்றிற்று.

ஆ பாயிரமுன்பட—கவி—௩௱௰.